[22nd August 1961

(இ) The Societies are provided with one or more of the following items of assistance by Government :—

(i) Grants from out of the Harijan Welfare Funds and Block Funds.

(ii) Loans and subsidies under the State Aid to Industries Act.

(iii) Free services of supervisory staff like Junior Inspector of Co-operative Societies and Senior Inspector of Co-operative Societies.

*Statues of foreigners*

* 1331 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the steps taken to remove the statues of all foreigners in the City of Madras; and

(*b*) the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) It has been decided that till arrangements are made for substitutes, the statues may remain where they are.

**SRI N. K. PALANISAMI :** ஸார், 1957–58–ம் வருஷங்களில் அன்னியச் சிலைகள் பூராவையும் எடுத்துவிட வேண்டும் என்று மத்திய சர்க்காரிலிருந்து எல்லா மாகாண சர்க்கார்களுக்கும் உத்தரவு வந்ததா? அதுபற்றி தயக்கத்திற்குக் காரணம் என்ன? மேற்கு வங்கத்தில்கூட மியூசியத்தில் வைத்து இருக்கிறார்களே?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதிலே மத்திய சர்க்கார் உத்தரவு போட்டு நாம் எடுப்பது என்று ஒன்றுமில்லை. நாமே ஒரு முடிவுக்கு வரவேண்டியதுதான், அது நாம் எடுக்கும் முடிவுதான். அப்படி அன்னியச் சிலைகளை எடுக்கும்போது, அந்த இடங்களில் தேச பக்தர்கள், தேசக் கவிஞர்கள், தேச விஞ்ஞானிகள் அவர்களுடைய உருவச் சிலைகள் வரும். அப்பொழுது இவை மியூசியத்திற்குக் கொண்டுபோகப்படும். அது வரை அவை இருக்கும். ஆனாலும் ரொம்ப ஆட்சேபகரமாக உள்ளவைகளை மியூசியத்திற்குக் கொண்டுபோய் விடுகிறோம். அதில் சர்ச்சைக்கு இடம் இல்லை.

**SRI A. A. RASHEED : Sir, will the Government retain these statues as a constant reminder of our hard won liberty?**

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir. I know some people do require reminders.

a.m. SRI K. VINAYAKAM : Sometime back, while answering a similar question, the Hon. the Minister for Finance was good enough to say that the presence of the statues of the foreign rulers and their representatives in the main thoroughfares would stand as a constant reminder to us that we should not once again become a subject nation. Does the Hon. Minister continue to hold that view in spite of the changed times?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, the generation is also changing. I was talking about the existing generation. I am sure the coming generation will function in a more favourable

22nd August 1961]

atmosphere. Apart from that, it is a question of convenience and timing of removal of these statues. I can assure the House that this would be kept in view by the Government and whenever opportunities occur, proper substitutes would be placed and these statues would be placed in suitable places elsewhere?

**Sri S. RAMALINGA PADAYACHI :** நம் நாட்டிலே இங்கிலாந்திலுள்ள பெரும் தலைவர்களுடைய உருவச்சிலைகள் இருக்கின்றன. இப்பொழுது நம் இரு நாடுகளுக்கிடையே நல்லெண்ணம், நல்லுறவு இருக்கின்றன. அந்தச் சிலைகளை எல்லாம் அகற்ற வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அங்கிருந்து வரக்கூடியவர்களுடைய நல்லெண்ணம் பாதிக்கப்படுமே. ஆகவே அவற்றை அகற்றாமல் இருப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அன்னிய நாட்டினருடைய அதாவது; பிரிட்டிஷாருடைய நல்லெண்ணம் இருப்பதற்கு இந்தச் சிலைகளை எல்லாம் தொடர்ந்து வைத்துக்கொண்டிருந்தால் என்ன என்று அங்கத்தினர் சொல்லுகிற மாதிரி இருக்கிறது. சிலைகளை வைத்துத்தான் நல்லெண்ணம் ஏற்பட வேண்டும் என்பதல்ல.

**Sri N. K. PALANISAMI :** அன்னியருடைய சிலைகளை அகற்றி நம் நாட்டுத் தலைவர்களுடைய சிலைகளை வைப்பதில், தமிழ் நாட்டு அரசியல் தலைவர்களுக்கு முக்கியமான இடம் கொடுக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இது வெறும் அரசியல் தலைவர்களுக்கு மட்டுமல்ல. நமது நாட்டிலுள்ள தேசிய கவிஞர்கள், தேசிய விஞ்ஞானிகள், தேசிய கலைஞர்கள் இவர்களுக்கெல்லாம் முக்கியத்துவம் கொடுக்கப்படும். அரசியல் வாதிகளிலும் இடம் பெறக்கூடிய மாபெரும் தலைவர்கள் இருப்பார்களேயானால் அதைப்பற்றியும் கவனிக்கப்படும்.

*Extension officer (Industries)*

*1332 *Q.*—**Sri T. R. RAMAMIRTHA THONDAMAN :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட்டார வளர்ச்சிப் பகுதிகளில் தொழில் அதிகாரியின் வேலை என்ன ?

(இ) தஞ்சை ஜில்லாவில் ஒவ்வொரு பிளாக்கிலும் இவர்கள் முயற்சியினால் ஆரம்பிக்கப்பட்ட வேலைகளின் (இரண்டாவது திட்ட காலத்தில்) விவரமென்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) & (இ) The information [a] is placed on the table of the House.

*Town Planning Schemes (Panchayats)*

*1333 *Q.*—**Sri M. D. THIAGARAJA PILLAI (on behalf of Sri N. R. THIAGARAJAN) :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஒவ்வொரு மேஜர் பஞ்சாயத்து ஊருக்கும் டவுன் பிளானிங் ஸ்கீமை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவருவார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : The provisions of the Town Planning Act are being extended by stages to all the Panchayats in the State with a population of 5,000 and above and which has an Executive Officer to administer and it is for the Panchayats to implement the Town Planning Scheme in their respective areas.

---

[a] Printed as Appendix V on page 615–620 infra.